105

Reg. No. M. 2997.

தனிப்பிரதி 1 அணா

ஆசிரியர் :
யாழ்ப்பாணம்
தென்கோவை,
ச. கந்தையபிள்ளை
தமிழ்ப் பண்டிதர்,
சிலோன்.

REPUBLIQUE FRANÇAISE

Liberté - Egalité - Fraternité

VITTAGAM

LE REDACTEUR
TENKOVAI
S. CANDIAH PILLAI
TAMIL PANDIT
JAFFNA
CEYLON.

JOURNAL HEBDOMADAIRE PARAISSANT LE JEUDI

# வித்தகம்

வியாழக்கிழமைதோறும் வெளிவருவது

நத்தம்போற் கேடு முளதாகுஞ் சாக்காடும்
வித்தகர்க் கல்லா லரிது. குறள்.

VOL. I. { புதுவை, ஸ்ரீமுக ஷ மாசி மீ கஅ உ (1—3—34) } No. 14

## ஔவை குறள்

### கண்ணாடி

கண்ணாடி தன்னி லொளிபோ லுடம்பதனுள்
உண்ணாடி நின்ற வொளி. (1)

அஞ்சு புலனின் வழியறிந்தாற் பின்னைத்
துஞ்சுவ தில்லை யுடம்பு. (2)

நாபி யகத்தே நலனுற நோக்கிடில்
சாவது மில்லை யுடம்பு. (3)

கண்டத் தளவிற் கடிய வொளிகாணில்
அண்டத்த ராகு முடம்பு. (4)

சந்திர னுள்ளே தழலுற நோக்கினால்
அந்தர மாகு முடம்பு. (5)

ஆர்க்குந் தெரியா வுருவந்தனை நோக்கில்
பார்க்கும் பரமா மவன். (6)

வண்ண மில்லாத வடிவை யறிந்தபின்
விண்ணவ ராகு முடம்பு. (7)

நெற்றிக்கு நேரே நிறைந்தவொளி காணில்
முற்று மழியா துடம்பு. (8)

மாதூ வெளியின் மனமொன்ற வைத்தபின்
போதக மாகு முடம்பு. (9)

சுத்தமோ டொன்றி மனமு மிறந்தக்கால்
முற்று மழியா துடம்பு. (10)

உ

திருவருள் துணை.




காலமுண்டாகவே காதல்
செய்துய்மின் கருதரிய
ஞாலமுண்டானொடு நான்முகன்
வானவர் நண்ணரிய
ஆலமுண்டானெங்கள் பாண்டிப்
பிரான்தன் னடியவர்க்கு
மூலபண்டாரம் வழங்கு
கின்றான்வந்து முந்துமினே
(திருவாசகம்.)

# வித்தகம்

புதுவை,
ஸ்ரீமுக மாசி மீ 18உ

## அன்னம்

அன்னம் அருந்தல் என்பதனுள் அடங்கும். அருந்தல் என்னும் பதம் ஐம்புல நுகர்ச்சியையே குறிப்பதாகும்; ஐம்புல நுகர்ச்சிக்கே பொருத்தமுடையதாகும். ஐம்புல நுகர்ச்சிகளுள் ஒன்று அன்னம். ஐம்புலங்களும் ஒரே காலத்து ஒருங்கே நுகரப் பெறுவது இணைவிழைச்சு. ஆதலால் அருந்தல் பொருந்தல் அனந்தல் என்று விதந்து கூறப்படுவன அன்னமும் இணைவிழைச்சு மாகும் ஐம்புலன்களும் ஒருங்கே நுகர்ந்து இன்புறும் நீர்மையது இணைவிழைச்சே என்பது

கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனு
மொண்டொடி கண்ணே யுள.
(புணர்ச்சி மகிழ்தல்-1.)

என்னும் தேவர் திருவாக்கானும் நன்கு வற்புறுத்தப்பட்டமை கண்டு கொள்க.

ஆலத்தை அமுதமாக்குதற்கு—தூலம் அசுத்தம் நீங்கி அமலமடைதற்கு நிறை முறையோடு கூடிய உணவும் இணைவிழைச்சும் இன்றியமையாதனவாகும். நிறை முறையோடு கூடிய இணைவிழைச்சின் பெட்பு அமயம் நேரும்போது விரித்து விளக்கப்படும். இப்பொழுது அன்னம் என்னும் உணவின் மாண்பு ஒரு சிறிது கூறப்படும்.

அன்ன ஊர்தி அயன். அன்னப் பறவையை அயன் என்னும் பிரமனுடைய் வாகனம் என்று கூறுவர் கற்பனையாளர். அன்னம் இல்லாவிடின் உலகமே இல்லை. அன்னம் = உண்ணப்படுவது—உணவு. இதுவே சிவ ஆகாரம்; ஆதாரம் எனினும் ஆம். ஐம்புல நுகர்ச்சி யெல்லாம் உணவு எனப்படுதற்கு உரியனவே யாயினும், அறுசுவையோடு கூடிய அன்னமே, மற்றைய நுகர்ச்சிகட்கும் முக்கிய காரணமாதல்பற்றி உணவு என்று சிறப்பாகக் கொள்ளப்படுவது சீவர்களுக்கு உணவு முன்னிலை. வியாபகமே முன்னிலை. முன்னிலை யெல்லாம் நஞ்சு. நஞ்சு எனின், அதுவே மருந்தாம். நஞ்சு மருந்தாகுமா? எனின், ஆகும் என்றே கூறப்படும். நஞ்சு அதிகமாக உண்ணப்பட்டால் கொல்லும். "அளவுக்கு மிஞ்சினால் அமுதமும் நஞ்சாம்" என்னும் பழமொழியும் உண்டு. அன்னம் என்னும் நஞ்சு அளவோடு நிறையோடு எவ்வாறு பஞ்சீகரணிக்கப்படவேண்டுமோ அவ்வாறு பஞ்சீகரணிக்கப் பட்டால்—சமைத்து அருந்தப்பட்டால் துன்பம் பிணி, மூப்பு, இறப்பு, பிறப்பு என்பனவற்றை அகற்றும் என்று உறுதி கூறுகின்றனர் வித்தகர் என்னும் சித்தர். இவ்வுண்மை பின்வரும் திருவாக்குக்களால் நன்கு புலப்படும்.

அப்பர்.

"..........................
பூர்துருத்திபூந்துருத்தியென்பீராகிற்
பொல்லாப்புலாற்றுருத்திபோக்கலாமே. 1.

........ ............ ........
நெய்த்தானநெய்த்தானமென்பீராகில்
நிலாவாட்புலாற்றூனநீக்கலாமே. 2.

..........................
சோற்றுத்துறைசோற்றுத்துறையென்பீராகில்
துயர்நீங்கித்தூநெறிக்கட்சேரலாமே." 5.

[ஷை பலவகைத் திருத்தாண்டகம்.]

சாத்திரம்பலபேசுஞ்சழக்கர்காள்
கோத்திரமுங்குலமுங்கொண்டென்செய்வீர்
பாத்திரஞ்சிவமென்றுபணிதிரேன்
மாத்திரைக்குளருளுமாற்பேறரே.
(ஷை திருமாற்பேறு — திருக்குறுந்தொகை. 3.

(இங்கே, பாத்திரம்என்பது சாண்வட்டகுண்டம் ஓமகுண்டம் வைகுண்டம், யாகசாலை பாகசாலை முதலிய எத்தனையோ திருநாமம்பெற்ற பாத்திரமாகிய வயிற்றை உணர்த்தி நின்றது. அவ்வயிற்றில் வளர்ந்து எழும் தேயுவைச் சிவமென மதித்து ஏற்றஆகுதி கொடுத்து அதனை அமலமாக்குவதே "பணிதல்" என்பது.)

குறள்

மிகினுங் குறையினுநோய்செய்யு நூலோர்
வளிமுதலா வெண்ணிய மூன்று. (1)

அற்றா லளவறிந் துண்க வஃதுடம்பு
பெற்றா னெடிதுய்க்கு மாறு. (3)

மாறுபா டில்லாத வுண்டி மறுத்துண்ணி
னூறுபா டில்லை யுயிர்க்கு. (5)

(ஷை 95 ம் அதி—மருந்து.)

அன்னம் மருந்து என்பது "ஆதிரையிட்டனள் ஆருயிர் மருந்து" (மணிமேகலை) என்பதனாலும் அறியப்படும். பொய்யில் புலவரும் மருந்து என்னும் அதிகாரத்தில் அளவறிந்து இரை மறிந்து உணவு கொள்வதையே முக்

யெமாக் கூறினர். அது "மருந்தென வேண்டாவாம் யாக்கைக்கு அருந்தியது அற்றது போற்றி யுணின்" எனவும் " அற்றால் அளவறிந்துண்க " எனவும் " மாறுபாடில்லாத வுண்டி மறுத்துண்ணின்" எனவும் அவர் கூறியனவற்றால் நன்கு புலப்படும். பின்வரும் புறநானூற்றுச் செய்யுளும் இவ்வுண்மையையே உணர்த்தி நின்றது.

## புற நானூறு

" தகுதி கேளினி மிகுதியாள
நீரின்றமையா யாக்கைக் கெல்லாம்
உண்டி கொடுத்தோருயிர் கொடுத்தோரே
உண்டி முதற்றே உணவின் பிண்டம்
உணவெனப் படுவது நிலத்தொடு நீரே
நீரும் நிலனும் புணரியோரீண்
டெம்பு முயிரும் படைத்திசினோரே "

(செ 18.)

(இ-ள்) " தக்க செய்கையைக் கேட்பாயாக. இப்பொழுது பெரியோய்! நீரை இன்றியமையாத உடம்பிற்கெல்லாம் உணவு கொடுத்தவர் உயிரைக் கொடுத்தார். உணவை முதலாகவுடைத்து அவ்வுணவால் உளதாகிய உடம்பு. ஆதலால் உணவென்று சொல்லப்படுவது நிலத்தோடு கூடிய நீர். அந் நீரையும் நிலத்தையும் ஒருவழிக் கூட்டினவர்கள் இவ்வுலகத்து உடம்பையும் உயிரையும் படைத்தவராவர்." என்பது.

அன்னம் தண்ணீர் என்பனவே நிலமும் நீரும் எனப்பட்டன. இவற்றையே "பூ நீர்" என்றனர் சித்தர். இது பரிபாஷை. வாய்மையான பூவும் நீரும் கொண்டு பூசித்தல் என்பது இதுவே. இதன் உண்மை அமயம் நேரும்போது விளக்கிக் கூறப்படும்.

இதனால் பெறப்படுவன யாவை? இனமறிந்து நிறையோடு இனம் சேர்க்கப்பட வேண்டும் என்பதும், அவ்வாறு சேர்ப்பதின் பயன்—ஒருவழிக் கூட்டியதன் பயன் அழியும் நிறையை வகித்திருக்கும் தூலம் அழியா நிறையாகிய அமலநிறையைப் பெறும் என்பதும் ஆம். இதனையே சித்தர் பெருமக்கள் "கற்பம் சாப்பிடுதல்" எனக் கூறுவார்கள். கற்பம் தூலம் சூக்குமம் என இருவகைப்படும். இவை அமயம் நேர்ந்துழி விரித்துக் கூறப்படும். முன்னிலை ஆகாரமாகிய அன்னம் தூலகற்பத்துள் அடங்கும். நஞ்சு என்னும் ம்ருதம் பஞ்சீகரணிக்கப்படும் தன்மையினால், அஃதாவது நஞ்சு என்னும் ம்ருதத்தை நிறையுட் புகுத்தினால் நிறை யென்னும் சிவத்தில் சிவம் என்னும் அமல அக்கினியில் ஆகுதி கொடுத்தால் 'ஆமலம்' என்னும் அகாரம் ம்ருதத்தின் வாயலில் நின்று ம்ருதம் என்பதை அம்ருதமாக மாற்றும். இதனாற்றான் காணப்பட்டன வெல்லாம் அழியுந் தன்மையுடையன என்றும் அதனால் தோற்றமுடைய சரீரமும் அழிந்துவிடும் என்றும் கூறுவது. ஆனால் இதன் மறைபொருளை இன்னது என அறியும் ஆற்றலில்லாதவர்—புண்ணியமில்லாதவர் படிப்பினால் வல்லபம்பெற்று அதனால் முற்றுமுணர்ந்தவராகத் தம்மை மதித்து எல்லாம் அநித்தியம் எனவும், அழிந்தேவிடும் எனவும் கண்டு அம்மட்டோடு அமைந்து, அதன்மேற் சென்று மறைபொருளை—மறையின் உட்பொருளை நுணுகி ஆராயும் மதிப்பொலிவு சிறிதுமின்றி, சரீரம் அழிந்த பின்புதான்—செத்த பின்புதான் முத்தி கிடைக்கும் என உழறிக் குழறி மாண்டு போயினர். இவையெல்லாம் எம்பெருமான் திருவருளாலன்றிச் சாத்திரங்கள் என வழங்கும் ஏடுகளால் அறியப்படுவனவாகுமா? இன்னோரன்ன அரிய பெரிய உண்மைகளை யெல்லாம்

"......................................
பையவே கொடுபோந்து பாசமெனுந்
[தாழுருவி
உய்யுநெறி காட்டு வித்திட்டு.........."

(திருவாசகம்-அச்சோப்பதிகம். 7)

எனவும் பிறவுமாக வரும் திருவாக்குக்களால் கௌணமாக அருளிப் போந்தனன் நமது அப்பன் மணிவாசகன்.

இவ் அன்னமே நாதம். இவ் அன்னமே விந்து. ஒருவன் அன்னத்தை உண்டால் அதனால் உதிரம் பொலிந்து அவ் உதிரச்சத்து விந்தாகத் திரிந்து அவன் சரீரத்தில் விளங்குகின்றது. ஒருத்தி அவ் அன்னத்தை உண்டால் அதனாலாய உதிரச்சத்து நாதமாகத் திரிந்து அவள் சரீரத்தில் விளங்குகின்றது. உற்று நோக்குமிடத்து இஃதோர் அதிசயமே. பொருள் ஒன்று (அன்னம்), விளக்கம் இரண்டு (விந்து நாதம்). காரணம் திணை மயக்கம்—திணை பேதம். இது பொது விதி இலக்கணம். இதனை எவரும் மறுக்கார். இதனால் விந்து நாதம் என்பன வெவ்வேறல்ல என்பதும், பிரிபடாதன பிரிபடாமல் பிரிந்து வியாபகத்தை விளக்குகின்றன என்பதும் நன்கு புலப்படும். தமிழ் என்பதனை வியாபக ஒலி என்பர். அதுவும் நஞ்சு—தானே என்பது ஒரு கடா. அதற்கு விடை ஆம்— அதுவும் நஞ்சுதான் ஆலந்தான் என்று கூறப்படும். ஒலி வரிவடிவமான தமிழை - பாஷையை நிறைமுறை என்னும் இலக்கண மின்றிப் பஞ்சீகரணித்தால் — வழங்கினால் அஃது இன்பம் தருவதாகுமா? அமிழ்தமாகுமா? நிறை முறையோடு பஞ்சீகரணிக்கப்படின் அதுவே அமிழ்தமாகு மன்றோ! ஒருவரிடத்துப் பேசும்போது-ஒலிக்கும் போது முன்னிலையாக விளங்கும் அவருக்குக் கோபம் என்னும் அசுத்த நிறையமைந்த அக்கினியை உண்டாக்கவேண்டும் எனின், வரிவடிவம் ஒலிவடிவம் அமைந்த சொற்களை நிறைமாறி வழங்கினால் அவ் அக்கினி உடனே அம் முன்னிலையோரிடத்து ஆக்கமுற அதன் பயனாகிய கோபம் என்பது அவரிடத்துக் காணப்படுகின்றதன்றோ! வியாபகம் என்னும் கடல் நஞ்சுள்ளது என்பதும் அதுவே ஆலகாலம் என்பதும் நன்கு பெறப்படுகின்றன. அவ் ஆலகாலம் என்னும் கடலைக் கடைந்தால் அமுதம் உண்டாகிறது. கடலைக் கடைந்து அமுதம் பெறுவது எவ்வாறு? சொல்லும் பொருளும் என்னும் இருவகைப்பிர

பஞ்சமாகிய பாற்கடலில் வித்தகம் என்னும் மந்தரமாகிய மத்தை நாட்டி வாசி என்னும் வாசுகியாகிய கயிறு பூட்டி உச்சுவாச நிச்சுவாச அளவு நிறை சமம் பெறுமாறு அஃதாவது சுத்த நிறையும் (சுரர்) அசுத்த நிறையும் (அசுரர்) சம நிறை—சம பலம் பெறுமாறு கடைய வேண்டும் என்க. இதனால் உண்டாகும் அமுதத்தை (நிறை கொண்ட நஞ்சை) உண்டால் வியாப்பியம் வியாபகம் என்பனகூடும் சந்தியை அடையலாம். வியாப்பியம் வியாபகம், ஆரியம் தமிழ்,விந்துநாதம், தன்னிலை முன்னிலை என்பனஒன்றே. இது தான் சந்தி வந்தனம்—(சந்தியா வந்தனம்) — உண்மையான கடவுள் வழிபாடு—சிவபூசை என்க. இதற்குக் காயம் என்னும் கடல் கடையப்பட்டுத் திரிய வேண்டியது அவசியம். காயம் திரிதல் என்பது யாது? காயத்தில் விளங்கும் அசுத்த நிறையுள்ள அசைவு—அசுத்த நிறையால் ஆக்கப்பட்டு அசையும் பை — அசைபை— சரீரமாகிய பை, சுத்த நிறையாக மாறி—சுத்த அசைவாக மாறி, அவ் அசைவினால் உண்டாகும் ஒலியும் (நாதமும்) சுத்த மடைந்து—சுத்த நாதமாகத் திரிந்து, சுத்த நாதமாக —சுத்த நாத சரீரமாக இச் சரீரத்தை மாற்றுவதாகும். குரம் (குறம்) பாடும் பையாக விளங்கும் மலக் குரம்பையானது அமலக் குரம்பையாக மாறுவதாகும். பிணமாய் விழுதற்குரிய பிண நாற்றம் நாறும் இப்புலால் துருத்தியானது நித்தியத்துவம் அடைதற்குரிய பூமணம் கமழும் பூந்துருத்தியாக மாறுவதாகும்.

"…………………………
மாயக் குரம்பை நீங்க வழிவைத்தார்க்
கவ்வழியே போதுநாமே."

(அப்பர் தேவாரம்.)

"…………………………
பூவில் நாற்றம் போன்றுயர்ந் தெங்கும்
ஒழிவற நிறைந்து மேவிய பெருமை
இன்றெனக் கெளிவந் தருளி
அழிதரும் ஆக்கை யொழியச் செய்த
[வொண் பொருள்
இன்றெனக் கெளிவந் திருந்தனன் போற்றி
அளிதரும் ஆக்கை செய்தோன் போற்றி"

(திருவாசகம்-திருவண்டப் பகுதி)

என்பனவற்றை நோக்குக. அசுத்தமான அசைபையானது சுத்தமான அசைபையாக மாறுதலடைதற்குரிய தந்திரமே—மறையே அசபா காயத்திரி வேதம் என்க. காயம் திரிதற் கேற்ற அரிய பெரிய தந்திரமன்றோ காயத்திரி என்பது.

வியாபகம் என்பது மயக்கத்தைத் தரும் மால்-விண்டு-விஷ்ணு. வியாப்பியத்தினின்றும் விண்டது-விரிந்தது; வியாப்பியத்தி னின்றும் பிரிபடாமல் வேறாகத் தோன்றுவது. ஏன் அவ்வாறு தோன்ற வேண்டும்? மயக்கம் என்னும் தோற்றம் இல்லாவிடின் ஒருவனும் மருந்தைத் தேடமாட்டான். மருந்து ஒன்று உண்டென்றும்—பித்தம் என்னும் மயக்கம் தெளிய மருந்துஒன்றுஉண்டென்னும் உணர்ச்சியே ஆக்கமுறாது. மருந்து கொடுக்கும்-மருந்தாயிருக்கும் மருத்துவன்—பவரோக வைத்தியன் ஒருவன் உளன் என்னும் நினைவே வராது. வயித்தியனும் இல்லை, மருந்தும் இல்லை என்பதே பெறப்படும் ஆதலால் விஷ்ணு இல்லாமல் உலகம் இல்லை. உலகம் விஷ்ணுமயம் என்பதன் பொருளும் இதுவே. விஷ்ணு என்பதற்கு வியாபகம் உடையவர் எனப் பொருள் கூறுவர். வியாபகம் விஷ்ணு. வியாப்பியம் சிவம். வியாபகம் என்னும் சமயம் விஷ்ணு சமயம்—வைஷ்ணவம். இது தான் ஆதி. எதற்கு ஆதி? கீழிருந்து மேலேறுவதற்கு இன்றியமையாத ஆதி. இது ஆறு படிகளையுடைய ஏறணி. இது தான் கீழ் உள்ள ஆறு ஆதாரம். அவையாவன: பாஞ்சராத்திரம், பாட்டாசாரியம்,மீமாஞ்சை, சமணம், பௌத்தம், லோகாயதம், என்னும், ஆறு தத்துவங்கள்—படிகள் என்க. இவ் ஆறு படிகளும் அறியா மோழைகள் விஷ்ணு சமயம் உயர்ந்தது என்றும் தாழ்ந்தது என்றும் கூறிக் கலாம் விளைப்பர். இவற்றைக் கடவர் தார்க்கு முத்தி என்பது முயற் கொம்பே. இவ் ஆறு படிகளையும் இவற்றின் இயல்புகளையும் குரு முகமாக அறியாதவன் பக்குவம் இல்லாப் பாமரன். இவைகளைக் கண்டு கடப்பதும் எளிதன்று. பாடுபட்டு இவற்றைக் கடந்து மேல் உள்ள ஆறு ஆதாரங்களைப் பற்றுதல் வேண்டும். வைரவம், வாமம், காளாமுகம், மாவிரதம், பாசுபதம், சைவம், என்பன மேல் உள்ள ஆறு தத்துவங்கள்—ஆதாரங்கள்—படிகள் என்க. இவைகளை அகச் சமயங்கள் என்றும் அவைகளை (கீழ் உள்ள ஆறு ஆதாரங்களை)ப் புறச்சமயங்கள் என்றும் வகுத்தனர் வித்தகர். இவ் ஆதாரங்களெனும் தத்துவங்கள் பன்னிரண்டையும் துவாத சாந்தமெனக்கூறியசித்தர்கள் — மெய்யடியார்கள் இவைகளில் கால் வைத்து அடி பேர்த்து அடி பேர்த்து ஏற வேண்டும் என்று கூறுவர். இக் கூற்றின் உட்பொருள் இன்னது என உலகமாக்கள் அறிய முடியாது என்பது ஒருதலை. இதனாற்றான் சித்தர் நூல்களில் சிலவற்றை ஒரு சிலர் படித்து அவைகளில் கூறப்பட்ட யோகத்துக்குரிய எட்டு அங்கங்களையும் அவ் அங்கங்களின் இலக்கணங்களையும் அறியமுடியாது தங்கள் அறியாமைக்கு ஏற்ப அவைகட்குப் பொருள் கண்டுவிட்டதாகப் பிழைபட நினைந்து பல மருந்துகளைச் செய்து அருந்தியும், பிராண வாயுவை (அந்தோ! பரிதாபம்!) மிக வருத்தப்பட்டு அடக்கப் பயிற்சி செய்தும், ஈற்றில் அசுத்தநிறை அதிகரித்தலால் தென்புலக் கோமானுக்கு நல்விருந்தாகின்றனர். இதனைப் பற்றிய உண்மைகள் அமயம் நேர்ந்துழி விரிவாக விளக்கிக் கூறப்படும். இப்பன்னிரண்டு ஆதாரங்களில் கீழ் உள்ள ஆறு ஆதாரம் சத்தியின் கூறு அஃதாவது மால் அம்சமாகவும் மேல் உள்ள ஆறு ஆதாரங்கள் சிவத்தின் கூறு அஃதாவது சிவாம்சமாகவும் வகுக்கப்பட்டன.

"அரியலீல் தேவியில்லை ஐயன் ஐயாற
எனவும் [னார்க்கே"

"மண்ணினை யுண்டமாயன் றன்னையோர்
[பாகங் கொண்டார்"

எனவும் நாவுக்கரையர் திருவாய் மலர்ந்தருளிய வற்றை நோக்குக. இவற்றின் இலக்கணங்களும் பிறவும் ஈண்டு விரிப்பிற் பெருகும். இப்படிகளை மிதித்து ஏறுவது மனோதர்மத்தால் ஆகாதோ எனின், எட்டுணையும் ஆகாது என்றே உறுதி கூறப்படும். மனம் வாக்குக் காயம் என்னும் மூன்றும் ஒன்றுறத் தொண்டு செய்தாலன்றி — வாய்மையாகப் பணி செய்து கிடந்தாலன்றி வேறு உபாயங்களால் இப்படிகளில் ஏறுவது முடியாத காரியமே. இவ்வாறாயின் சரியை கிரியை யோகம் என்னும் படிகள் இருக்கின்றனவே, அவைகளை ஒவ்வொன்றாகத் தானே கடக்கவேண்டும் என்றால், ஒவ்வொன்றிலும் மனத்தொண்டு வாக்குத் தொண்டு காயத்தொண்டு என்னும் முத்தொண்டும் தலைமை பெற்று நிற்க வேண்டும் என்க. ஆதலால் மனம் வாக்குக் காயங்கள் ஒன்றுதலே இன்றியமையாதது. கர்மத்தால் கர்மத்தை க்ஷயம் செய்யவேண்டும்— ஒழிக்கவேண்டும். வாய்மையாகத் தொண்டு புரியுங்கால் கர்மங்கள் ஒன்றோடொன்று மோதி அழியும். சத்துவத்தில் ரசோகுணத் தலைமை மரபுடையோர் கர்மத்தால் கர்மத்தை க்ஷயம் செய்து மாயையைக் கடக்க வல்லவராவர் — அடிப்படுத்த வல்லராவர்.

இதுகாறும் கூறியவைகளால் புலப்படுவன யாவை? வியாபகமாகிய பிரபஞ்சம் விஷ்ணு என்பதும், அதுவே கடல்—நஞ்சு என்பதும், அக்கடலைக் கடைந்து அதன் மத்தியில் திரண்டு நிற்கும் அமுதத்தை—நம்மைக் காக்கும் அமுதகட ஈசனை (திருக்கடையூர் அமுதகடேசர்)—ஆலமாயிருந்து அமுதமாக மாறிய நடேசனை —நவநீத கண்ணனை—அமல களங்கனை—காத்தற்றொழிலையுடைய விஷ்ணுவை— கோகழி மத்தியில் வீற்றிருக்கும் நந்தி என்னும் ரக்ஷகனை—ரக்ஷகதேகத்தைப் பெறவேண்டும் என்பதும் ஆம். ரக்ஷகதேகம் தான் பொன்னாக மாறிய தேகம். பொன், மாடு, ரிஷபம் என்பன ஒன்றே. திருவாதவூரன் என்னும் மாணிக்கம், நன்றி என்பது ஒரு சிறிதும் அறியாப் பாமர மாக்கள் உண்மையை உணர்ந்து உய்யவேண்டும் என்னும் கருணை மேலீட்டினால், மாணிக்கங்கள் உதிர்வது போலவும், பஞ்சதனுக்கள் பூத்து ஒளி வீசுவது போலவும் திருவாய் மலர்ந்தருளிய "திருப்பொற்சுண்ணம்" என்னும் அத்தியற்புத அதி மதுரச் செந்தமிழ்த் திருப்பதிகத்தின் உள்ளுரையும் இதுவே என அறிக. பொன்னாக மாறிய தேகமே மால்விடையாகும். மால் விடையாக மாறிச் சிவனைத் தாங்கினான் என்பதன் உண்மைப் பொருள் இதுவேயாம்.

## திருவாசகம்

சடகரியும் பரிமாவுந் தேருமுகந் தேறாதே
இடபமுகந் தேறியவா றெனக்கறிய வியம்
[பேடீ
தடமதில்க ளவைமூன்றுந் தழலெரித்த
[அந்நாளில்
இடபமதாய்த் தாங்கினான் திருமால்காண்
[சாழலோ

(ஷை திருச்சாழல் செ. 15.)

எம்பெருமான் விடையேறிக் காட்சி கொடுப்பது என்பதன் பொருளும் இதுவே. அமல முதற்படி இதுவே. அமல முதற்படியில் ஏறினவரே ரக்ஷகதேகத்தைப் பெற்றவர். இவரே பிரளயாகலர்—ஐம்பூதப் பிரளயத்தை வென்றவர்—பஞ்சதன் மாத்திரைகளை அறிந்தவர். முன்னிலையை நிறை கண்டு பஞ்சீகரணித்து மேல் படியேற்றம் பெற்று வீடு பேறு அடைதற்குரியார் இவரே. இந்த அமல முதற்படியை மிதித்தவரே கடவுளைக் கண்டவர். அவ்வாறு கண்ட உண்மையை உலகத்தவர்களுக்கு அவர்கள் பக்குவத்துக்கு ஏற்ப நிறை முறையோடு கூடிய கற்பனையாகக் கூறியருளுவர். பிறவாறு கூறூர். கூறுவதால் உலகம் பயனடையாது.

இவ்வாறு கடவுளைக் கண்டபேறு—ரக்ஷக தேகத்தைப் பெற்ற பேறு எதனாலாயது? முன்னிலையாகிய அன்னத்தை—நஞ்சை நிறை முறையோடு பஞ்சீகரணித்து அமுதமாக்கி உண்டதனாலாயது. ஆலத்தினால் ஆலத்தை அமுதமாக்கினாலன்றிப் பிறவாறு ரக்ஷகதேகத்தைப் பெறலாம்—காலனை வெல்லலாம் என்பது முழு மூடன் கூறும் வெற்றுரை. அன்னத்தாலாய உடம்பின் பயன் ரக்ஷக தேகமாகிய தூவெள்ளேற்றில் "தோடுடைய செவியன்" ஆகிய அர்த்த நாரீசுரனைக் காண்டலே யாகும்.

உலகில் ஒழுங்காக உணவுகொள்ள—தன் சரீர நிறை அறிந்து அதற்கு ஏற்ப உணவு கொள்ள அறிந்தவரே மிக அரியர், இல்லை எனினும் ஆம். அகில சீவர்களாலும் அலட்சியம் செய்யப்படும் அத்தியாயமன்றோ இது. உணவை வெறுப்பவரையே—அலட்சியம் செய்பவரையே—நிறை முறையின்றி நியமமின்றி உண்பவரையே—முத்தி வாயலில் நிற்பவர் என்று போற்றுவார்கள் உலகமாக்கள். உண்மை அறியாதார் வேறு என் செய்வர்? முன்னிலைகளை முன்னிலையாகிய ஆலத்தை நிறைகண்டு பஞ்சீகரணித்து அருந்தினாலன்றி வேறு எவ்வாற்றானும் உய்தியடைய முடியாது என்பதே தத்துவப் பெரியார் துணிபும் வேத உண்மையுமாகும். சாந்தோக்கிய உபநிடதமும் இருக்கு வேதமும் இவ் உண்மையை நன்கு வற்புறுத்தி விளக்குகின்றன. அமயம் நேரும் போது அவை எடுத்துக் காட்டி விளக்கப்படும்.

இதுகாறும் கூறியவைகளால் அன்னமே—அன்னமாகிய முன்னிலையே—முன்னிலையாகிய வியாபகமே—வியாபகமாகிய நஞ்சே நமக்குப் பகை என்பதும், அதனை நிறை கண்டு பஞ்சீகரணித்தாலன்றி —உறவு படுத்தினாலன்றி வேறு எவ்வாற்றானும் உய்தி

# உடம்பின் அருமை பெருமை

[12-வது வாரத்தொடர்ச்சி]

சகச நிட்டையாளர் உலகர்போல் வாழ்ந்து ஒப்புர வொழுகுவர். அன்றி, சவிகற்ப நிர்விகற்ப நிட்டையாளர்—உபாசக நிட்டையாளர்போல் முன்னிலைகளை நிறைகண்டு பஞ்சீகரணித்து உய்தியடைய அறியாது "துற்றவை துறந்த வெற்றுயிராக்கை" யராய், "வாயோடு கண்மூடி மயக்கமுற்று" காடுமலைகளிலும் ஆற்றங்கரைகளிலும் பிற இடங்களிலும் அசைவற வீற்றிருப்பவரல்லர். இவ்வுண்மை பின்வரும் திருவாக்குக்களாலும் நன்கு புலப்படும்.

## பட்டினத்தடிகள் பாடல்

மாத்தானவத்தையும் மாயாபுரியின் மயக் [கத்தையும்
நீத்தார்தமக்கொரு நிட்டையுண்டோ நித்த [னன்புகொண்டு
வேர்த்தாற்குளித்துப் பசித்தாற்புசித்து விழிதுயின்று
பார்த்தாலுலகத் தவர்போலிருப்பர் பற்றற் [றவரே.

## பத்திரகிரியார் புலம்பல்

வாயோடுகண்மூடி மயக்கமுற்று நில்லாமல்
தாயோடுகண்மூடித்தழுவிநிற்பதெக்காலம்.

உற்ற வாக்கையின் உறு பொருளாகிய சிவம் எனும் செம்பொருளைக் காண அறியாத சவிகற்ப நிர்விகற்ப நிட்டையாளர்—உபாசகநிட்டையாளர் அசுத்த தனுக்கள்—மருளுடம்புகள் அமலமடைதற்கு உரியனவாகா. இவர் இந்நிலையில் பலகாலம் வீற்றிருப்பினும் எம்பெருமான் திருவடியைக் காணமாட்டாதவரே — இறந்து பிறப்பவரே என்பது தத்துவப் பெரியார் பாடல்களால் நன்கு புலப்படும்.

(திருவாசகம் திருவண்டப்பகுதி; செத்திலாப்பத்து செ. 2; திருமந்திரம் 3-ம் தந் 7-வது தியானம் செ. 6. கந்தரலங்காரம் 71, 85, முதலியவற்றை நோக்குக. சுத்த சாதகமும் இவர் இறந்து பிறப்பவர் என்றே வெள்ளிடை மலைபோலக் கூறிவிட்டது. செ. 54, 55, 68, 69 )

இவர் காயமாயத்தை கழிக்கும்வகை அறியார். உண்மை வேதமாகிய அருளாத ஒலியை — சூக்கும கற்பத்தை — அருளமுதத்தை அறியமாட்டார். மாறிப் பிறந்த தத்துவப்பெரியாரே இத்தத்துவங்களை அறியவல்லார். விரிப்பிற் பெருகும். இந்நிட்டையாளர் நிட்டையில் இருந்த பாவனையாகவே நிலத்துட் புதைக்கப்பட்டனர்—படுகின்றனர் எனவும் இதனால் தத்துவப் பெரியார் போலவே இவரும் நிலத்தோடு மறைந்து முத்தியடைந்தவராவர் — அடைபவராவர் எனவும் கூறுவாரும் உளர். இவர் உயிரோடு நிலத்துட் புதைக்கப்பட்டனர்—படுகின்றனர் எனக்கருதுவாருமுளர்—விளம்புவாருமுளர். இந்நிட்டையாளரைத்தான் பிறரைத்தான் உயிரோடு நிலத்துட் புதைத்துவிடும்படி எந்தச் சாத்திரமும் கூறாது. இவ்வாறு எவரையும் அறிஞர் புதைத்துவிட முயலார். இது கொலை பாதகமேயாதலின். இந்நிட்டையாளர் தமது பிராரத்த ஒழிவை — மரணகாலத்தை முன்னரே அறிந்து நிட்டைகூடி அமைவர். இந்நிட்டையும் அவரவர் மனநிலைக்கு ஏற்றவாறு — பக்குவத்துக்கு ஏற்றவாறு பலவகையினதாகும். இவருள்ளே சிலர் அதிக கஷ்டப்பட்டு சாகின்றனர். சிலர் அதிக கஷ்டமின்றிச் சாகின்றனர். கூலிவேலை செய்து பாமரர் எனப் பலரால் மதிக்கப்பட்டு எவ்வகையான உபாசனையுமின்றி வாழ்ந்தோர் சிலர் தாம் இறந்து போவதை முன்னரே அறிந்து பிறருக்கும் உரைத்து அதிக கஷ்டமின்றியும் செத்துப்போயினர். இன்னோர் எழுதவும் படிக்கவும் நன்றாகப் பேசவுமே தெரியாதவராகவும் காணப்பட்டனர். அசுத்த நிறையின் ஆதிக்கத்தால் தமது அவச்சலனம்—காமம் முதலிய குணங்கள் வெளியே தோன்றுமாறு வாழ்ந்தோர் சிலர் அதிக கஷ்டமின்றி இறந்ததும் உண்டு. இன்னும் சிலர் சிவநாமங்கள் பேசிச் சடிதியில் திடீர் என்று இறந்ததும் உண்டு. வித்துவப் பெரியார் பலர்—வழிபாடுகள் பூசைகள் உபாசனைகள் என்று சில பல புரிந்தோர் பன்னெடுநாள் நோய்வாய்ப்பட்டுக் கஷ்டமடைந்து இறந்தனர். சிலர் நோயால் நலிந்து உறவினர்க்கும் சீடர்க்கும் ஆவன கூறி—நன்மை தின்மை சொல்லி—தமது பாசங்கள் பற்றுக்களைத் தெரிவித்து இறந்தனர். உபாசனையாளராய்ச் சில மருட் புதுமைகளும் உஞற்றினவராகப் புகழப்பட்ட கவிவாணராகிய கம்பர், சோழன் அம்பு தம் மார்பிற்பட்டுப் பதைத்து வீழ்ந்து செத்துப் போயினர் என்பர். [எனினும் பிறர் சிலர் போல இவரும் ஆழ்வார் வரிசையில் அபிமானிகளால் புகுத்தப் பட்டனர். இவ்வாறு அடியார் வரிசையிற் புகுத்தப்பட்டோரும் படுவோரும் உளர். "அடியார்பவரே அடியவராமால்" "அடியார் பொன்னம்பலத்தாடல் கண்டாரே" (திருமந்திரம்) என்னும் திருவாக்கை அறிஞர் அறியாதவரல்லரேயாயினும் அடியாரல்லாரைஅடியார் என்பதும், உலகசம்பிரதாயமானபோலிவழக்கு-ஒருவகை உபசாரம் என்பதே உசிதமாகும். ஆயினும் உண்மை முத்தியடைந்த சமய குரவர் முதலிய மெய்யடியார் போல இறந்தோரை வழிபட அறிஞர் முயலார் என்பது சொல்லாமலே அமையும்.] இவற்றை யெல்லாம் உற்றுநோக்கு மிடத்து ஒவ்வொரு சீவரும் தம் தம் வினைப்பயனுக்கு ஏற்ற ஏற்றவாறு மரணவேதனையைச் சிறிதாகவும் பெரிதாகவும் அந்தரங்கமாகவும் வெளிப்படையாகவும் அநுபவித்தே சாதலடைகின்றனர் என்பது நிச்சயமாகும். இதுபற்றியேஞானசம்பந்தப் பெருமானும் திருவையாற்றுப்பதிகத்தில் "புலனைந்தும் பொறிகலங்கி நெறிமயங்கி அறிவழிந்திட்டை மேலுந்தி, அலமந்த போதாக" என மரணவேதனையின் இலக்கணத்தை அருளிப்போந்தனர். திருவள்ளுவரும் "சாதலின் இன்னாதது இல்லை" (குறள்—௨௩௰) என்றனர். உடம்பை விட்டு உயிர் பிரிதலே மரணமாகும். காமம் கோபம் முதலிய குணங்களுக்கு—வாதம் முதலிய பிணிகளுக்குக் காரணமான அசுத்த நிறையின் ஆதிக்கத்தால்—அவச்சலனங்களால்— கீழ் முகவினைவுகளால் மூலாக்கினி மேலெழுந்த அப்புக்கூற்றுக்கு அடக்கமாகி ஐ என்னும் சிலேட்டுமம் மேலெழுந்த சன்னி (Coma)

---

அடையமுடியாது என்பதும், அழுக்கை அழுக்கால் அகற்றும் உபாயம் போல, முன்னிலையாகிய சரீரத்தை — சரீரமாகிய பாசத்தை— அசுத்த நிறையை-நஞ்சை-அழுக்கை— திரையை— அஞ்ஞானமாகிய மறைப்பை முன்னிலைப் பொருள்களுள் இனமாயவற்றைக் கண்டு பஞ்சீகரணித்து உண்ணுதலால் — அநுபவித்தலால் அகற்றி அமலமடையவேண்டும் என்பதும், அதுவே கடவுளைக் கண்டு அவர்க்கு அணுக்கராய் வதிந்து உய்தியடைதற்கு இன்றியமையாத உண்மை நெறி என்பதும் பிறவும் ஒருவாறு உணரப்படும்.

சுபம்.

என்னும் எமவேதனை அடைந்தே மரணம்-உடலை விட்டு உயிர்பிரிதல் ஏற்படுகின்றது. சீவரெல்லாம் இவ்வாறே சாதலடைகின்றனர். மரணகாலத்தில் இவ்வாறே அறிவு அழிகிறது—சேதனம் பின்னமடைகிறது. ஆதலால் செத்துப் போதலில்—உடம்பை விட்டு உயிர் பிரிதலில் விதி காரணமான-கர்மம் காரணமான சில வேறுபாடு நிகழ்வது கண்டு பெருமை பாராட்டுவது—“அடைந்தார்—ஐக்கியமானார்” எனப் புகழ்வது அறியாமையே! உடலும் உயிரும் ஒழிவற ஒன்றி நித்தியத்துவம் அடையாது—முத்தியடையாது அவை ஒன்றனை விட்டு ஒன்று பிரியும்போது வேதனையில்லாமற் போகாது. இது பற்றியே “மரணம் பிறப் பென்றிவை யிரண்டின் மயக்கறுத்த கருணைக்கடலுக்கே சென்றூதாய் கோத்தும்பீ” என அருளிச் செய்தார். இவற்றைக் கடந்து—மரணத்தைக் கடந்து தூலத்தோடு மறைந்து உண்மை முத்தியடைந்தவர் எமது உண்மைச்சைவக் குருமணி மணிவாசகப்பிரபு என அறிக. “களிப்புக் கவர்வு மற்றுப் பிறப்புப்பிணி மூப் பிறப்பு மற்று, ஒளிக்கொண்ட சோதியமாய் உடன் கூடுவது என்றும் கொலோ” என நம்மாழ்வார் அருளியதும் அறிக. இம்மரணமற்ற நிலையை (Immortality) க் கூறுவது — அடையச் செய்வது நமது அரிய பெரிய சைவ சமயம் ஒன்றேயாம். இவ்வுண்மை ஒன்றினலன்றி வேறு எத்தகைய தந்திரங்கள் மந்திரங்களினாலும் சைவசமயம் உயர்வடைய முடியாது. இவ்வுண்மை ஒன்றினால்தான் சைவம் சமயகோடிகட்கெல்லாம் தலையாய் அரசு வீற்றிருக்கின்றது. சாதலை ஒழித்து உடலும் உயிரும் ஒழிவற ஒன்றி நித்தியத்துவம் அடையவேண்டும் என்ற உண்மையையே—அரிய பெரிய வேத உண்மையையே — சைவ நெறியையே “புக்கிலமைந்தின்றுகொல்லோ வுடம்பினுட்டுச்சி லிருந்த வுயிர்க்கு”. என்னும் திருமறையால்விளங்கவைத்தனர் நமது பொய்யில்புலவர். இப் பொய்யில் புலவன் பொருளுரையையன்றிநோக்கினருண்டோ? துன்பம் பிணி மூப்புச் சாக்காடு என்பனவற்றிற்கு உறைவிடமாகிய அசுத்த தனுக்கள்தோறும் ஒதுங்கியிருந்து போந்த உயிர்க்கு, ஒழிவற ஒன்றி நிலையாயிருத்தற்கேற்ற — நித்திய தத்துவம் அடைதற்கேற்ற அமலதனுவாகிய தூய உடம்பு ஒன்று இதுவரை அமைந்ததில்லை கொல்லோ எனத்தேவர் இரங்கிக்

கூறியதன் உண்மையைக் காய்தல் உவத்தல் அகற்றி ஆய்ந்து தெளிக. உடலுயிர் பிரிபடாது ஒன்றி நித்தியத்துவம் அடைதலே அவற்றின் தலையாய சம்பந்தம்—நட்பு. ஏனைய இடை கடைச்சம்பந்தங்களும் தேவரால் கூறப்பட்டமை அவர் திருமறையுட் காணப்படும். அமயம் நேர்ந்துழி விரித்து விளக்கப்படும். இவற்றால் உடலை விட்டு உயிர் பிரிவது எவ்வாற்றானும் மரணமே—பிறவி நெறியே என்பதும் அவை தம்முட் பிரிபடாது ஒன்றி நித்தியத்துவம் அடைதலே சைவநெறி—முத்தி நெறி என்பதும் வெள்ளிடை மலை போல் விளங்கி நிற்றல் கண்டு கொள்க.

(தொடரும்)

# ஆரியமும் தமிழும்

(13-ம் வாரத்தொடர்ச்சி)

இவ் ஒலிகள் அனைத்தும் மகாரத்தினிடத்து உள்ளீடாகத் தொனித்தலால் அமல ஐகாரம் விளங்கிற்று என்பது. அமல ஐகார ஒலியாகிய நித்தியவேதம் தலையிடை கடையாய், கடை இடை தலையாய் (ஆரோகண அவரோகணமாய்) ஒலிக்கும். இதன் விவரம் எவர் அறிவர்? நாதபீடத்தை அணவிய மெய்யடியாரே அறிய வல்லவராவர். “பாடி எழுகின்ற வேதாகமங்களும், நாடியினுள்ளாக நான் கண்டவாறே” (திருமந்திரம் 8-ம் தந்திரம் நின்மலாவத்தை 14) என அருளிச் செய்தார் எம் அண்ணலாகிய திருமூலர். மெய்படியாராகிய உண்மைத் தமிழர், தமிழராகிய தொண்டர் என்றும் எம்பெருமான் கழலைத் தொழுபவரே. இவர்கள் நெஞ்சத்தில் எம்பெருமான் கழல் பேசாத நாள் இல்லை? என் இல்லை. இவர்கள் இறந்து பிறவாதவர்களாதலால் சதா வேதம் ஓதுபவர்களே யாவர். ஏனைய போலித் தமிழரும் போலி ஆரியருமாகிய எம் போலியர் சாதலடையும் வல்லபம் பெற்றவராதலால், இவ்வுடலை விட்டு உயிர் பிரிந்து பிறிதோர் பிண்டத்தைப் பற்றிக் கருப்பையிற் கட்டுண்டு இருந்து, பின் புவி கண்டு அகார சப்தம் தழுவும் வரை எம்பெருமான் கழல்பேசாத நாளேயாகும். இதுபற்றியே நமது அப்பர், ‘புலியூரானைப் பேசாதநாளெல்லாம்பிறவாநாளே” என்று அருளிச் செய்தார். இவ் அரிய பெரிய மகாரத்தைக் குறித்துச் சித்தர் பெருமானாகிய சட்டை முனிவர் அருளிக் கூறியது இங்கே காட்டப்படுகின்றது.

## சட்டைமுனி

மௌனவித்தை யேதென்றால் மூன்றெழுத் தென்பார்
மாட்டுகிற இனங்காணார் மார்க்கங்காணார்
மௌனவித்தை யாவதென்ன வாய்மூடலென்பார்
மாமுதற் குதிரையினாலாவ தென்ன?
மௌனவித்தை கேட்டிருப்பார் கூட்டுறவு காணார்
வாய்மூடி வழியோடே நாதங் கேளார்
மௌனவித்தை யாசன்றான் தூண்டிக் காட்டில்
மணிமுதலாய்த் தசநாதங் கேட்குந்தானே

இப்படியாகச் சித்தர் நூல்களில் முக்கியமாக மகார வித்தையே பல பரிபாஷைகளால் கூறப்படும். மகாரம் மௌனம் என்பன ஒன்றே. இது அரிய பெரிய இரகசியம். ஆதலால் அடியேன் இதனை மேலும் விரித்துரைப்பதற்கு அதிகாரியல்லன்? மணிவாசகப் பெருமானுக்குத் திருப்பெருந்துறைக் குருநாதன் உபதேசித் தருளியதும் இம் மகாரவித்தையே என்பது “தன்னே ரில்லோன்றானே யான தன்மை, என்னேரனையோர் கேட்கவந் தியம்பி” எனவும், “என்னையோர் வார்த்தையுட் படுத்துப் பற்றினாய்” எனவும் “ஓங்காரத்துட்பொருளை ஐயன் எனக்கு அருளியவாறு ஆர்பெறு வாரச்சோவே” எனவும் அம் மணிவாசகப்பெருமான் அருளிய வாற்றால் நன்கு புலப்படும். இவ்வரிய பெரிய மகாரமாகிய “அந்தணர் மறையையே” “மறை” (மறைந்தபொருள்) என்று தத்துவப் பெரியார் அனுபவ முறையாக அருளிய தமது பாடல்களில் பாராட்டினர். உண்மையாகிய சத்தியம் சத்தியமாகிய வேதம் வேதவடிவாகிய ஆசான் ஆசானாகிய ஆரியன் ஆரியனாகிய கடவுள் உலகமாக்களுக்கு மறைபொருளே, யாகும்.

“அகரமதாதியான எழுத்தெலாமாகி, மகாரமுமான மேலோன்” எவனோ அவனே தமிழனும் ஆரியனுமாவன். தொல்காப்பியர் நாத பீடத்தை அணவி இவ்வுண்மைகளை நன்குணர்ந்த தத்துவப் பெரியாரல்லராயினும், பிற்காலத்து வித்துவான்களிலும் கூடிய மதிப்பொலிவுடையராதலால் “எல்லா வெழுத்தும் வெளிப்படக் கிளந்து” என்னும் சூத்திரத்தில் (தொல்—எழுத்து—102) “அளபிறகோடல் அந்தணர்

மறைத்தே' என்பதனால் ஒலிவடிவங்களின் இலக்கணம் தம்மால் உணர்த்த முடியாது என உண்மைகூறி விலகிக்கொண்டனர். ஒலி அனைத்தும் நாத பீடத்துள் அடக்கமாக உள்ளன என்பது "அரவொலி ஆகமங்கள் அறிவாரறி தோத்திரங்கள், விரவிய வேதவொலி விண்ணெலாம் வந்தெதிர்ந் திசைப்ப" என்னும் தம்பிரான் றோழர் திருவாக்கானும் நன்கு புலப்படும். வியாபகமாகிய ஒலிவரிவடிவங்களாக விளங்கும் உலக நூல்களை "அந்தணர்மறை" என்பதும் அவற்றை ஓதுவோரை "அந்தணர்" என்பதும் உலகியல் நோக்கிய போலி இடுகுறி வழக்காகிய உபசாரவழக்கேயாகும். எழுதாமறையாகிய ஆரியமென்னும் வியாப்பியமும் ஒலிவரிவடிவமாகிய தமிழ் என்னும் வியாபகமும் காரண காரியமாய் எம்பெருமான் வடிவமாதல் பற்றியே, "ஆரியமும் செந்தமிழும் ஆனான் கண்டாய்" எனவும் "வடமொழியும் தென்றமிழும் மறைகணான்கும் ஆனவன்காண்" எனவும் பிறவுமாகத் தத்துவப் பெரியார் பாடியருளினர். 'வடசொல்' 'வடமொழி' என்பனவற்றில் 'சொல்' 'மொழி' என்பவைகளை "எழுதாக்கிளவி" என்பதில் "கிளவி" என்பது போலக்கொள்க. வடக்கு, உத்தர கோசம் நாதபீடம் என்பன ஒன்றே. "வனம் புகுந்தானூர் வடக்கென்பதாமே" எனவும், தானான வண்ணமும் கோசமும் சார்தரும்" எனவும் (திருமந்திரம ஞானகுரு தரிசனம் 8, 9) பிறவுமாக வரும் தத்துவப் பெரியார் பாடல்களை நோக்குக. உள்ளியக்கமாக விளங்கி உண்மை அந்தணரால் அறியப்படும் ஆரியம் என்பது புற இயக்கமாகிய ஒலிவரிவடிவமுடைய பாஷைகளுக்குப் பெயராகாது வியாபகமாகிய ஒலிவரிவடிவப் பாஷைகளுள் ஒன்றாகிய சமஸ்கிருதத்தை "ஆரியம்" என்பது போலி இடுகுறி வழக்காகிய கற்பனையேயாகும். இத்தகைய கற்பனைக்கூற்று இல்லாவிடின் உண்மை இன்னது என அறியும் ஆற்றல் உளதாகுமா? இடுகுறி அந்தணர் போற்றும் இடுகுறி ஆரியத்தைக்கொண்டே உண்மை அந்தணர்போற்றும் உண்மை ஆரியம் இன்னது என உணர்வது எளிதாயிற்றன்றோ! ஆதலால் கற்பனைகளைக்கொண்டு உண்மையை நாடுவதேயன்றி அவற்றை அறவே ஒழிக்க முயல்வதும் அவற்றையே உண்மை என்று நம்பி உழல்வதும் உய்யுந் திறன் ஆகா என்க. உண்மையைநாடும் ஆற்றலும் காதலும் இல்லாதவரும் ஒருகால் உண்மையை நாடும் புண்ணியம் அஃதாவது அத்தகைய உணர்ச்சி உளதாய வழியும் அபிமானப் பேயால் ஆவேசிக்கப்பட்டு நிற்பவரும் உண்மையை ஒப்புக்கொள்வது முடியாத காரியமே. ஆரியம் தமிழ், வடக்குதெற்கு, உத்தரம் தக்ஷிணம்முதலிய சித்தர் பரிபாஷைகளை அறியாத கற்பனைப்புலவர் இவற்றிற்குத் தம் மனம்போனவாறு பொருள் கண்டுசாங்கோபாங்கமாகக் கற்பனைக்கதைகளைத் தமது மனப்பான்மையால் சிருட்டிசெய்து கற்பனைகளையே உண்மை என்று உலக மாக்கள் ஆராயாது நம்பி இடர்ப்படுமாறு அவர்களை மயங்க வைத்தனர்.

பதிபசு பாசம் என்பன வியாப்பியம் வியாபகம் என்னும் இரண்டனுள் அடங்கும். அவை மூன்றாயவாறு என்னையெனின், வியாப்பியம் பதியாக வியாபகமே பசு பாசம் என்னும் இரண்டையும் உடையது என்க. பாச சம்பந்தமுடையது பசு. வியாபகம் நிறைபேதம் உடையது. பேதம் என்பது குற்றம். இதுவே அழுக்கு அசுத்தம் பங்கம் பாசம் எனப்படும். வியாபகம் அசுத்த நிறை மிகுந்துள்ளது; விஷகுணமுடையது. எதனால்? ஆலகால விஷமானது நிறைபேதத்தால் ஆனது. அசுத்த நிறை மிகுந்துள்ள பஞ்ச பௌதிக தனு நிறையோடு பஞ்சீகரணிக்கப்படின் ஆரூர்ப் பங்கச தளமத்தியில் நடனமிடும் அப்பன் திருவடித் தாமரை காணப்படும். அஃதாவது தேகத்துள் வித்தாயிருந்த ஆசான்—மறைந்திருந்த—மறையாயிருந்த — மறை என்னும் ஆசானாகிய சிவம் தோன்றும் என்பது. அவ்வித்து எந்த நிறையைப்பெறவேண்டுமோ அந்த நிறையைப் பெறின் "மெய்யனாய் வெளி காட்டி என் முன் நின்றதோர் அற்புதம் விளம்பேனே" (திருவாசகம் அற்புதப் பத்து 1) என்றவாறு அவ்வாசானாகிய ஆரியன் முன்னிலைப்படுவன். இவ் ஆசானே வேதங்கள் ஓலமிடும் இடத்திலிருந்து விச்ரும்பித்து முன்னிலைப் பெற்றுவந்தவர்; ஆரியம் என்னும் வடதிக்கிலிருந்து வந்தவர். இவ்வாறு அவ்வாசான் முன்னிலைப் போந்த ஞான்று "பெருந்துறைக்கோன் முன்பான் முழங்கு முரசு" (திருவாசகம் திருத்தசாங்கம் 8) எனப்பட்ட சாம வேதம் நிறை கொண்டு கானஞ் செய்யப்படும். இதனால் அசுத்த நிறையாகிய ஆலகால விஷம் அமுதமாக மாறும். ஆலமே அமுதமாக உண்டால் காலனை வென்றிடலாம்.

(தொடரும்)

---

### புதுவையில்

## பிரஞ்சு சண்டைக்கப்பல்

சென்ற சுக்கிரவாரம் (23-2-34) காலை 6 மணிக்கு புகேன்வீல். (Bougainville) என்னும் பெயரிய பிரஞ்சு சண்டைக்கப்பல் எமதூர் துறைமுகத்திற் போந்தது. எமது தேசாதிபதி அவர்கள் தமது அந்தரங்ககாரியதரிசி மூலமாகவும், போலீஸ் தலைவர் மூலமாகவும் அதற்குரிய மரியாதைகளை விமரிசையாக நடத்தி வைத்தது மிகவும் பாராட்டத்தக்கதே. திங்கட்கிழமைகாலையில் கப்பல் பட்டாளத்து ஒரு பகுதியினர் இறங்கி தேசாதிபதி மாளிகைக்கு பின் புரத்தில் மிளிரும் அழகிய மைதானத்தில் சிப்பாய் பட்டாளத்தோடு கலந்து அணிவகுத்து தேசாதிபதி அவர்களால்பரிசோதனை செய்யப்பட்டு பிறகு அவர்களுக்குரிய பதக்கங்கள் அளிக்கப்பட்டன. கப்பல் 28-ம் தேதி வரையில் தங்கி இருக்கும் என்று நம்பப்படுகிறது.

---

## "வித்தகம்"

வருட சந்தா விவரம்.

முன் பணம்

இந்தியா, பர்மா, சிலோன் ரூ. 3-0-0
மலாயா, சிங்கப்பூர், சைகோன் } ரூ. 4-0-0

வித்தக நிலையம்,
புதுச்சேரி.

**Bureau de la Direction:**
RUE AMBALATADOUAYER MADAM No. 4.

காரியாலயம் :—
அம்பலத்தாடு ஐயர் மடத்து வீதி நெ. 4.

Sandhanam Printing Works, Pondicherry.

Le Gérant R. Nagarattinam.